7th February 1959]

SRI K. SATTANATHA KARAYALAR : இந்த லஞ்ச ஊழல் வழக்கு விசாரணையில் ஏதாவது ஐ. ஸி. எஸ். அல்லது ஐ. ஏ. எஸ். ஆபீஸர்களின் மீது விசாரணை நடந்து வருகிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சில அதிகாரிகளின் பேரில் விசாரணை நடந்து வருகிறது.

*Anthrax*

* 106 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether it is a fact that two persons have died of Anthrax in the North Arcot district recently; and

(*b*) if so, the precautions taken to prevent its infection to others?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir.

(*b*) The preventive measures taken were :

(i) Dead sheep were buried deep in the earth with lime.

(ii) Flaying of dead animals and consumption of the flesh of dead animals were prohibited.

(iii) Preventive inoculations were done among sheep and cattle.

(iv) Affected houses and other places were disinfected.

(v) Human cases of Anthrax were treated with penicillin.

(vi) Wide propaganda about the methods to be adopted to wards off infection by the people was carried out.

*107 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு மாவட்டத்தில், மேல் ஆரணியில் அம்மையால் பாதிக்கப்பட்ட ஆட்டு இறைச்சி தின்ற காரணத்தினால் பலர் நோயினால் இறந்து விட்டதாக செப்டம்பர், அக்டோபர் மாதங்களில் புகார் வந்ததா ?

(ஆ) அதன் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன ?

(இ) எத்தனை பேர்கள் இறந்தனர்? எத்தனை பேர்கள் பாதிக்கப்பட்டனர்?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir. Report of the death of two persons was received.

(*b*) The attention of the member is invited to the answer to Legislative Assembly Question No. 106.

(*c*) From 23rd October to 12th November 1958, 48 cases of human anthrax were recorded, out of which two proved fatal.

SRI A. A. RASHEED : Sir, May I know the source of the infection of Anthrax and when the cattle were affected, were they burnt or buried?

THE HON. SRI M. A. MANICKAVELU : The infection came by handling dead sheep either by skinning or handling the meat The dead animals were buried deep in the earth, about 8 or 9 feet below.

SRI S. M. ANNAMALAI : சில கிராமங்களில் ஆடுகளை அறுப்பதற்கு முன்னால் சர்ட்டிபிகேட் வாங்கவேண்டும் என்ற உத்தரவு பிறப்பிக்கப்பட்டதா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இம்மாதிரியான ஒரு விதி இருக்கிறது. ஆனால் அந்த விதி சில இடங்களில்தான் கவனிக்கப்படுகிறது.

SRI M. K. SOMASUNDARAM : இம்மாதிரி வியாதிகள் எந்தெந்த காலங்களில் பரவுகிறது. இதைத் தடுப்பதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : எங்கெங்கு நோய்கள் உண்டாகிறதோ அங்குதான் தடுப்பு நடவடிக்கைகள் எடுப்பார்கள். மற்ற இடங்களில் தடுப்பு நடவடிக்கை வேண்டியதில்லை.

*Raw film factory*

* 108 *Q*.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state with reference to Question No. 81 answered on 10th September 1958—

(*a*) whether any decision has been reached regarding the starting of a raw film factory at Ootacamund, Nilgiris district; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) & (*b*) The question is under the consideration of the Government of India.

SRI N. K. PALANISAMI : இதை ஒரு எக்ஸ்பர்ட் கமிட்டி பரிசீலனை செய்து வந்தார்கள் என்று சொன்னார்கள். அதன் கருத்தென்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்த கமிட்டி பல இடங்களை பரிசீலனை செய்து விட்டு பிறகு ஊட்டிதான் சிறந்தது என்ற முடிவிற்கு வந்தது.

SRI J. MATHA GOWDER : அதற்கான ஆரம்ப வேலைகள் நடத்துவதற்கு எத்தனை ஆண்டுகள் பிடிக்கும் ?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்தக் கேள்வியை பார்லிமெண்டில் கேட்டால் பதில் சொல்வார்கள்.

*Tenkasi Panchayat*

* 109 *Q*.—SRI S. M. ANNAMALAI : கனம் ஸ்தல-ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) தென்காசி பஞ்சாயத்தை முனிசிபாலிட்டியாக மாற்ற வேண்டுமென்ற திட்டம் உண்டா ?

(ஆ) முனிசிபாலிட்டியாக மாற்றக்கூடாது என்று 1958-ம் ஸு செப்டெம்பர் மீ 25 உ மக்களால் ஆட்சேபணை செய்யப்பட்ட மகஜர் கிடைத்ததா ?

(இ) அதன் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) There is no proposal to constitute a municipality for the Tenkasi Panchayat area at present.

(*b*) Yes, Sir.